30-1

# மதுரை
# மீனாட்சியம்மன் திருக்கோயிலில்
# நகரத்தார் திருப்பணிகள்





சொ.சொ.மீ. சுந்தரம், எம்.காம்.,

உ

சிவமயம்

# மதுரை
# மீனாட்சியம்மன் திருக்கோயிலில் நகரத்தார் திருப்பணிகள்




சொ.சொ.மீ. சுந்தரம், எம்.காம்.,

# முன்னுரை

எண்ணிக்கையில் சிறுபான்மைச் சமூகமாக இருந்தாலும் எண்ணத்தால் உயர்ந்து இந்திய வரலாற்றில் பெரும்பங்கு பெற்றவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள். ஒழுக்கமான வாழ்க்கை, உழைப்பு, நாணயம் ஆகியவற்றைத் தம் வாழ்வின் இலக்கணமாகக் கொண்ட நகரத்தார்கள் மதுரை மீனாட்சி சுந்தரேசர் திருக்கோயிலின் வளர்ச்சியில் அதிக அக்கறையும் ஈடுபாடும் கொண்டவர்கள். வடக்குக் கோபுரம் மொட்டைக் கோபுரமாக இருந்ததை முழுக் கோபுரமாக்கிய பெருமையும் ஆலயத்தைச் சுற்றி நந்தவனம் அமைத்த பெருமையும் நந்தவனப் பகுதி வேறு செயல்களுக்கு மாற்றப்படாமல் பாதுகாத்த பெருமையும் நகரத்தார்களுக்கே உண்டு. விளம்பரத்தை விரும்பாமல் "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்று வாழ்ந்த நகரத்தார்களின் திருப்பணிகள் பின்னால் வந்தவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லாமல் போய்விட்டன. இந்நிலை மாறவும் முன்னோர் செய்த திருப்பணிகளை இளைய தலைமுறை அறிந்து கொள்ளவும், அதன் மூலம் இத்தகைய நல்ல பணிகளில் இன்றைய இளைஞர் சமுதாயம் ஈடுபடவும் செய்ய வேண்டும் என்பதற்காக, நகரத்தார்கள் மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலில் செய்த திருப்பணிகளில் சிலவற்றை மட்டும் சுட்டிக் காட்டுவதே இச்சிறு நூலின் நோக்கமாகும். இது ஆழியினை நாழியினால் அளக்கும் முயற்சி என்றாலும் "சென்ற காலத்தின் பழுதிலாத் திறனை" நினைவூட்டினால்தான் "இனி எதிர்காலத்தின் சிறப்பு" வளரும் என்ற எண்ணத்தோடு 7-7-1995ல் நிகழவிருக்கும் மதுரை மீனாட்சி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழாவையொட்டி இந்த நூலை எழுதி வெளியிடுகிறோம்.

30-1

காலம் கருதி மிக வேகாமாகச் செய்யப்பட்ட இப்பணியில் பங்குகொண்ட சான்றோர் அறநெறியண்ணல் லெ.நாராயணன் செட்டியார் அவர்கள் அன்புக்கும் ஆதரவுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நல்ல முயற்சியில் எனக்கு ஊக்கம் தந்து பெருமுயற்சி எடுத்துப் பணியாற்றிய மதுரை நகரத்தார் சங்கச் செயலர் தேவகோட்டை "பழம்நீ" லெ.மு.மு. முத்து மாணிக்கம் செட்டியார் அவர்களுக்கும் விரைவில் அச்சிட்டு நூல் வெளிவர ஏற்பாடுகள் செய்துதவிய அன்பு ஜெராக்ஸ் கண்டனூர் நா. சிதம்பரம் செட்டியார் அவர்களுக்கும் நன்றியுடையேன்.

காசி முதல் கன்னியாகுமரி வரை நம் முன்னோர் செய்த பணிகளை அறிந்து, இளைஞர்கள், திருப்பணியும் தமிழ்ப்பணியும் செய்யத் தொடங்க அருள்புரிய வேண்டுமென்று அன்னை மீனாட்சியை வணங்கி வேண்டுகிறேன்.

பணிவுள்ள
சொ.சொ.மீ. சுந்தரம்.

மதுரை,
7-7-1995.

அரசர்கள் காலம் முடிந்த பிற்பாடு கோயில் திருப்பணி செய்தவர்களைச் சொல்கிறபோது முதலில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தை மனதார நினைத்து நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். திரைகடல் ஓடித் திரவியம் தேடிய நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் அந்தத் திரவியத்தைத் தேவாலயத் திருப்பணிகளுக்கு அள்ளி அள்ளித் தந்து பழைய அரசர்களின் இடத்தைப் பெற்றார்கள். காளஹஸ்தி வரையில் இவர்களது திருப்பணி தர்மம் பரவியிருக்கிறது.

*– காஞ்சி முனிவர் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்*

தமிழ்நாட்டில் எப்போது கோயில்கள் ஏற்பட்டன என்று குறிப்பிடுவது கடினமாக இருக்கலாம். ஆனால் தமிழகத்தில் உள்ள எல்லாக் கோயில்களிலும் நகரத்தார்களின் பங்கும் சேவையும் இல்லாத கோயில் இல்லை என்று கூறிவிடலாம். பொருளைத் தேடுவது ஒருபுறம் இருந்தாலும் தேடிய பொருளைத் தர்ம காரியங்களுக்கும் ஆன்மீகத்தை வளர்ப்பதற்கும் நகரத்தார்கள் செலவு செய்து முன்னணியில் இருந்து பணியாற்றி இருக்கிறார்கள்.

*– சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகள்.*

பண்டைத் தமிழ் மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட எல்லையில் தான் ஆலயம் அமைத்தார்கள். ஆனால் நகரத்தார்களோ காசி முதல் கன்னியாகுமரி வரை பரந்துள்ள – ஏன் கடல் கடந்தும்கூட – ஆலயங்களைப் புதுக்கி, புதியன தோற்றுவித்துச் சரித்திரம் படைத்த பெருமை பெற்றுள்ளார்கள். அவர்களின் பணியால் மறைகள் வளர்ந்தன. ஆலயங்கள் பொலிவு பெற்றன. சமயம் தழைத்தது.

*– சத்குரு சாந்தானந்த சுவாமிகள், புதுக்கோட்டை.*

கோயில் வழியதாகக் குடிகளை அமைத்துக்கொண்ட ஒப்பற்ற நாகரீகம் இன்று நகரத்தார் சமூகத்தில் தான் நிலவுகிறது. அதனால் அச்சமூகத்தினர் திருக்கோயில்களுக்கு வழங்குவதில் கணக்குப் பார்ப்பதில்லை. வழங்குவதோடு மட்டுமின்றி முறையாக வழிபாடுகள் செய்வதிலும் ஈடுபட்டார்கள்.

*– தவத்திரு குன்றக்குடி அடிகளார்.*

நகரத்தார்களின் தர்மத்தை ஆதிசேஷனாலும் அளவிட்டுக் கூறமுடியாது. ஆலயங்கள், அன்னசத்திரம், தேவாரப் பாடசாலை, ஆகமப் பாடசாலை ஆகியவற்றைத் தாராள மனத்துடனும் அன்புடனும் திருப்பணி செய்தும் நடத்தியும் வருகிறார்கள். இகபர சாதனமாகிய புண்ணியத்தை மெய்யன்புடன் செய்து வருவதில் இவ்வகுப்பார்களுக்கு இணையாக வேறு எந்த வகுப்பார்களையும் சொல்லிவிட முடியாது. இவர்கள் தர்மங்களைச் சம்பாதிப்பதில் சதுரர்கள்.

*– வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார்.*



அங்கயற் கண்ணி அம்மை ஆலயக் குடநீ ராட்டு
மங்கலக் கலசம் தாங்கி மறையவர் வாழ்த்துச் சொல்ல
தங்குலப் பெருமை காக்கும் சரஸ்வதி ஆச்சி யோடும்
பொங்கிய மகிழ்ச்சி யோடும் நாரணர் பொலியும் காட்சி

26. 6. 1974




நாகப்ப ஐயா




வேங்கடாசல ஐயா



லெ. நாராயணன்
செட்டியார்



வி.என். சிதம்பரம்
செட்டியார்



இராம. இராமநாதன்
செட்டியார்

# மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலில் நகரத்தார் பணிகள்

மன்னர் பின்னோர் என்று மதிக்கப்படும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கோயிலைச் சார்ந்து வாழும் குடிமக்கள். சமயச் சார்பும் அழுத்தமான சிவப்பற்றும் உடையவர்கள். சங்க இலக்கியத்தில் நகரம் என்ற சொல் கோயிலைக் குறிக்கும் "முக்கட் செல்வன் நகர்" என்பது புறநானூறு. நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள், தங்களை ஒன்பது நகரக்கோயில்களை வழிபடும் மக்களாகப் பல நூறாண்டுகளுக்கு முன்பே வகைப்படுத்திக் கொண்டார்கள். இதனாலேயே கோயிலைக் குறிக்கும் சங்க காலச் சொல்லான நகரம் என்பதனைத் தம்மோடு இணைத்து நகரத்தார் எனப் பெயர் வைத்துக் கொண்டார்கள்.

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக என்பதையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு

*வீட்டினில் செட்டாக வாழ்ந்திடுவார் – யாதும்*
*வீணின்றி மிக்கக் கணக்கிடுவார்*

என்று சுத்தானந்த பாரதியார் பாடுவது போலக் கணக்காக வாழ்ந்து, சிக்கனத்தால் சேர்த்த பொருளைச் சிவன் கோயில் திருப்பணிக்குச் செலவிட்டு மகிழ்பவர்கள் நகரத்தார்கள்.

*சிறுவாட்டைச் சிக்கனமாய்ச் சேர்த்துவைப்பாள் ஆச்சி*
*சிவன்கோயில் சந்நிதியில் வளரும் திருவாச்சி.*

என்று கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் பாடும் வகையில் சிறுவாட்டுப் பணத்தால் திருவாச்சி செய்பவர்கள் நகரத்தார் இனப்பெண்கள். ஆயிரக்கணக்கான சிவன் கோயில்களில் கோடிக்கணக்கில் திருப்பணி செய்தாலும், நகரத்தார்களுக்கு மதுரை மீனாட்சி சுந்தரேசரிடம் பக்தியும் ஈடுபாடும் அதிகம். அறுபத்து மூன்று நாயன்மார்களில் காரைக்கால் அம்மையார், இயற்பகையார், அமர்நீதியார், கலிக்கம்பர், மூர்த்தியார் ஆகிய ஐயவரும் தனவணிகப் பெருமக்கள் என்பது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் கண்ட முடிவாகும். இவர்களில் மூர்த்திநாயனார் மும்மையால் உலகாண்ட திருத்தலம் மதுரை. நகரத்தார்களின் பக்தி வயலில் சொக்கலிங்கப் பெருமான் பயன் தரும் முக்திச் செடியாய் முளைத்தமைக்கு இதுவும் ஒரு காரணம் ஆகும். தங்கள் ஒன்பது நகரக் கோயில்களிலும் இறைவனுக்கும் இறைவிக்கும் சொக்கலிங்கம் மீனாட்சி என்ற பெயர் இல்லாமையால், தாங்கள் கோட்டை கட்டி வாழ்ந்த ஊர்களில்

பெரும்பாலான கோயில்களில் சிவனுக்கும் சக்திக்கும் சொக்கலிங்கம் மீனாட்சி அல்லது சுந்தரேசர் மீனாட்சி என்று பெயரிட்டு அழைத்தவர்கள் நகரத்தார்கள்.

தங்கள் வீட்டு ஆண்குழந்தைகளுக்கு முருகனுக்குரிய திருக்கார்த்திகை நாளிலும், பெண்குழந்தைகளுக்குச் சிவபெருமானுக்கு உரிய திருவாதிரை நாளிலும் விழாக்கள் நடத்தி இறை வழிபாடு செய்ய வைத்துப் பல்லாண்டுகளாகச் சிவபக்திச் செல்வர்களாக விளங்கும் நகரத்தார்கள் "சிவ ராஜதானி" என்றும் "துவாத சாந்தத் தலம்" என்றும் புகழப் பெறும் மதுரைத் திருக்கோயிலில் செய்த திருப்பணிகள் எல்லையற்றவை. பாண்டிய மன்னர்களோடும் நாயக்க மன்னர்களோடும் போட்டி போடும் வகையில் திருப்பணி செய்தவர்கள் நகரத்தார்கள் என்று சரித்திரம் பேசுகிறது. 1863 ஆம் ஆண்டு முதல் 1995 ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ 132 ஆண்டுகளில் மதுரை மீனாட்சி திருக்கோயிலில் நகரத்தார்கள் செய்த பணிகளைக் கீழ்க்கண்டபடி நினைவு கூறலாம்.

## வரலாறு படைத்த வயிநாகரம் திருப்பணி

நகரத்தார்களிடையே முதன் முதலாகச் சுமார் 25 லட்ச ரூபாய் செலவில் மதுரை மீனாட்சி திருக்கோயிலில் திருப்பணி செய்து வழிகாட்டிய சான்றோர் அமராவதி புதூரைச் சேர்ந்த சிவப்பெருஞ்செல்வர் வயி. நாக. ராம. நாகப்ப செட்டியார் அவர்கள். இவரும், இவருடைய தம்பி வெங்கடாசலம் செட்டியாரும் வணிகம் செய்வதற்காக மதுரை வந்து பொருளும் சேர்த்துப் புண்ணியமும் சேர்த்தனர். அவர்கள் மதுரைக் கோயிலில் வழிபாடு செய்ய வந்தபொழுது கோயில் பெரிதும் பழுதடைந்து காணப்பட்டது. ஆலயத்தில் ஒளியில்லை. தேள், நட்டுவாக்காலி, பாம்பரணை, பெருச்சாளி, உண்ணி, சுண்டெலி ஆகியவை எங்கும் உரிமையோடு திரிந்தன. கோபுரங்களில் மரங்கள் வளர்ந்தன. தளவரிசைகள் தகர்ந்து போயின. சூரியனும் சந்திரனும் பகலும் இரவும் நேராக வந்து வழிபட்டார்கள். இடையிடையே வருணனும் வழிபட்டான். மண்டபக் கால்கள் சாய்ந்து கிடந்தன.

*தேளும்பல் நட்டுவாக் காலிகளும் பாம்பரணைகளும்*
*செறிந்த தன்றி*
*நீளும்பல் லுடைய பெருச் சாளிகளும் ஞானிகள் போல்*
*நிறைவுற் றோங்கத்*
*தூளிகளில் உண்ணிகளும் சுண்டெலிக் காடவையுமங்குத்*
*துலங்கி வாழும்*
*கேளும் இன்னம் அவைசெய்யும் கேடெல்லாம் விரிவாகத்*
*திளத்து வேனால்.*

என்ற பழைய பாடல் இந்நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. இதை மாற்றத் திருவுள்ளம் கொண்ட

மீனாட்சியம்மை திருப்பணிக்கு நாகப்ப செட்டியாரைத் தேர்ந்தெடுத்தாள்.

1863ல் அரசாங்கத்தார் மதுரைத் திருக்கோயில் நிர்வாகத்திற்கு ஐந்து உறுப்பினர் குழுவை அமைத்தனர். அதன் தலைவராக நாகப்ப செட்டியார் அவர்கள் நியமிக்கப் பட்டார்கள். தன் சொந்தச் செலவில் நாகப்ப செட்டியார் அவர்கள் தம்பி வெங்கடாசலம் செட்டியார் துணையுடன் திருப்பணியைத் தொடங்கினார்கள். பழுதடைந்திருந்த சித்தி விநாயகர் கோயில் திருப்பணி முதலில் நிறைவேறியது. பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சேர்ந்த நாகப்ப செட்டியார் அவர்கள் பிள்ளையார் சுழியாகச் சித்தி விநாயகர் திருப்பணி செய்தார்கள். தொட்டது துலங்கச் சித்தி விநாயகர் திருவருள் செய்தார். முதல் பிரகாரத்தில் சாய்ந்திருந்த மதில் திருத்தப்பட்டது. பள்ளியறை புதுப்பிக்கப்பட்டது. ஊஞ்சலுக்குப் பொன் தகடு போர்த்தப் பெற்று, சொக்கலிங்கர் மீனாட்சியுடன் பூவுலம் வாழப் பொன்னூஞ்சலாடத் தொடங்கினார். மேல்தளங்களில் தட்டோடுகள் பழுது பார்க்கப்பட்டன. இருள் நிறைந்த மண்டபங்களில் பலகணிகள் வைக்கப்பட்டன. பனிரெண்டு கோபுரங்களிலும் பரம்பரையாக வாழ்ந்து வந்த குரங்குக் கூட்டங்கள் தந்திரமாக அப்புறப்படுத்தப்பட்டன. (அடையாளத்துக்குச் சில குரங்குகள் இன்று அங்குமிங்கும் தலையைக் காட்டுகின்றன.) திருமதிலைச் சுற்றியிருந்த கழிவிடங்கள் தூய்மைப்படுத்தப்பட்டன. சுற்றியுள்ள இடங்களை நாகப்பையா அவர்கள் விலைக்கு வாங்கி மதிலைச்சுற்றி நந்தவனம் அமைத்தார்கள். பதினாறு கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், அட்டசக்தி மண்டபம், பசுத்தொழு, கிளிமண்டபம், வசந்தராயர் மண்டபம், கழுவேற்று மண்டபம் ஆகியவை புதுப்பிக்கப் பெற்றன. திருக்கல்யாண மண்டபம் பழுது

பார்க்கப் பெற்று அதன் முன்னால் வேலைப்பாடுகள் அமைந்த செப்போட்டு மண்டபம் அமைக்கப்பெற்றது. (இம்மண்டப மேல் பகுதியில் நாகப்பையா, வெங்கடாசல ஐயா ஆகியோர் ஓவியங்கள் உள்ளன.) ஆடிவீதியில் கல்லால் தளவரிசை போடப்பட்டது. பொற்றாமரைக்குளத்தில் படித்துறை முறைப்படி அமைக்கப் பெற்று கைப்பிடிச்சுவர்கள் கட்டப் பெற்றன.

கபாலி நீள் கடிமதில் என்று திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற கபாலி மதில் சுவர்களில் நாயன்மார் வரலாற்றுச் சுதைச் சிற்பங்களும் பொற்றாமரைச் சுவர்களில் திருவிளையாடற் புராணச் சித்திரங்களும் அமைக்கப் பெற்றன. நாயக்க மன்னராகிய முதலாம் கிருஷ்ணப்பர் கட்டிய வடக்குக் கோபுரம் நெடுங்காலமாக நிலைமட்டத்தோடு மொட்டைக் கோபுரமாக இருந்தது. இக்கோபுரத்தின் கீழ் முனீஸ்வரர் திருக்கோயில் அமைந்திருந்தது. மொட்டைக் கோபுரத்தை முழுக்கோபுரமாக்க வேண்டுமானால், முனீஸ்வரர் கோயிலின் மேல் ஏறித்தான் கட்டவேண்டும். முனீஸ்வரர் கோயிலின் மேல் ஏறினால் எட்டுநாளில் இறந்து போவார்கள் என்ற அச்சம் மக்கள் மனத்தில் இருந்தது. அக்கோபுரம் பலகாலமாக மொட்டைக் கோபுரமாகவே இருந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும். நாகப்பையா சிற்பிகளை அழைத்தார். மொட்டைக் கோபுரத்தை முழுக் கோபுரம் ஆக்குங்கள். எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறேன் என்றார். உயிர்மேல் ஆசைகொண்ட சிற்பிகள் உடன்படவில்லை. தன்னுயிரையும் உடம்பையும் பொருளை யும் மீனாட்சிக்கே தந்து விட்ட நாகப்பையா, கோபுரத்தில் ஏறி நிலைமட்டத்தின் மேல் முதல் செங்கல்லைத் தானே வைத்தார். எட்டு நாட்களில் இறந்து போவார் என்று சிற்பிகள் வருந்தினார்கள். மீனாட்சியின் கடைக்கண் பார்வைக்கு முன் எமன் விடும் பாசக்கயிறு இற்றுப்போகும்

என உணர எட்டு நாட்களாயின. ஒன்பதாம் நாள் திருப்பணி தொடங்கப்பெற்றது. மீனாட்சி திருப்பணிக்குச் செல்வத்தை அள்ளிக் கொடுத்தவர்கள் பலர் உண்டு. ஆனால் தாயின் திருப்பணிக்குத் தன்னையே பணயம் வைத்த பிள்ளையை நாகப்பையா மூலம் உலகம் கண்டு கொண்டு பாராட்டியது. மொட்டைக் கோபுரம் முழுக் கோபுரமாயிற்று.

வண்டியூர்த் தெப்பக்குள மைய மண்டபம் திருத்தப் பெற்றது. இரண்டு தங்கச் சப்பரங்கள், வெள்ளிப் பெருச்சாளி, வெள்ளி மயில் வாகனம், கற்பக விருட்சம், சிம்ம வாகனம், பூத வாகனம், அன்ன வாகனம், கயிலாச வாகனம், காமதேனு வாகனம், இரண்டு தங்கக் குதிரை வாகனங்கள், இரண்டு தங்கப் பல்லக்குகள், இரண்டு பெரிய வெள்ளி இடப வாகனங்கள் வெள்ளிச் சிம்மாசனம் ஆகியவை செய்து வைக்கப்பட்டன. இப்பொழுது நான்கு மாசிவீதிகளும் கொள்ளாமல் பெருங் கூட்டமாக மக்கள் கூடிநின்று சித்திரைத் திருவிழாவைப் பார்க்கிறார்கள். இந்த விழாவில் இறைவன் எழுந்தருளும் வாகனங்கள் எல்லாம் அமராவதி புதூர் வயிநாகரம் நாகப்பயாவால் செய்து வைக்கப்பெற்றவை என்பதை எண்ணும்போது அவர் புகழ் இமயத்தைச் சிறிதாக்கி விடுகிறது. "செட்டியார் சிக்கனம் சிவன்கோயில் வாகனம்" என்று பாராட்டத் தோன்றுகிறது.

தங்கத்தாலும் கல்லாலும் இழைக்கப்பெற்ற பல அணிகளும் செய்யப் பெற்றன. 1875 ஆம் ஆண்டிலேயே ஆண்டுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வருமானம் வரக்கூடிய கட்டளைகளை ஏற்படுத்தி, படமாத்தூர், குருந்தம்பட்டு முதலிய கிராமங்களை வாங்கி வைத்து, நாள்தோறும் வழிபாடு குறைவின்றி நடக்க நாகப்பையா ஏற்பாடு செய்தார்கள்.

மதுரை தெப்பக்குளத்தின் அருகில் முத்தீசர் கோயிலின் வலப்புறம் நந்தவனம் அமைத்து நாள்தோறும்

வில்வமாலை, இண்டைமாலை, கொண்டைமாலை ஆகியவை வர ஏற்பாடு செய்து திருமாலை தொண்டு செய்தார்கள். நாகப்ப செட்டியார் மடைப்பள்ளி கட்டப் பெற்றது. அர்த்த சாமத்திற்குச் சம்பா நைவேத்தியம் அன்றன்றைக்குப் புதிய வெண்ணெய் உருக்கி ஏற்பாடு செய்யப்பெற்றது. அபிடேகத் திரவியங்கள் நாடோறும் கொண்டு வரப்பட்டு, முழுக்காட்டப்பட்டது. மீனாட்சிக்கு வெண்ணிற ஆடை, சொக்கலிங்கப் பெருமானுக்குப் பட்டுக்கறை போட்ட பத்தாறு வேட்டி ஆகியவை நாள்தோறும் புதிதாகச் சார்த்தப்பட்டன. துடைப்பதற்குத் தும்பைப்பூப் போன்ற துண்டு நாள்தோறும் தரப்பட்டது. இவை எல்லாம் நாகப்பையாவின் வெள்ளை உள்ளத்தையும், தூய்மையையும், சிவப்பற்றையும் நமக்குக் காட்டக் காண்கிறோம். மீனாட்சி திருக்கல்யாணத்தன்று, மலையத்துவசன் மகளான மீனாட்சியை நாகப்பையா தன்மகளாக நினைத்துத் திருமணம் செய்து கொடுப்பார். கல்யாண மண்டபத்தில் லஸ்தர் குளோப் விளக்குகள் ஏற்றப் பெறும். வாழைத்தோரணம் கட்டப்பெறும். திருக்கல்யாணச் சாமான்களை வைக்க நாகப்பையா வீட்டில் தனியாக ஓர் அறை ஒதுக்கப்பட்டது. திருக்கல்யாணத்தன்றும், தேர்த்திருநாள் அன்றும் நாகப்பையா வீட்டில் எல்லோருக்கும் கல்யாணச் சாப்பாடு போடப்பெறும். தேர்த்திருநாளில் தேர் நிலைக்கு வந்த பிறகுதான் நாகப்பையா குடும்பத்தார் உணவருந்துவார்கள்.

வடக்காடி வீதியில் சிவாகம பாடசாலையும் வடக்குச் சித்திரை வீதியில் தேவாரப் பாடசாலையும் வைக்கப்பட்டன. கோயில் பணியாளர்களில் பூசைமுறைப் பட்டருக்கும் பரிசாரகர் பதினாறு பேருக்கும் வடை பாயாசத்தோடு பகல் சாப்பாடு போடப் பெற்றது. சொக்கலிங்கப் பெருமான் திருப்பரங்குன்றம் போகும்பொழுது வயிநாகரம்

குடும்பத்தினர் கூடவே நடந்து போவார்கள். அங்கேயும் அன்னம் பாலிப்பு உண்டு. சித்திரைத் திருவிழாவில் தேருக்குச் சுவாமி எழுந்தருளியவுடன் அம்மன் கோயில் சுவாமிகோயில் இரண்டிலும் சந்தனக்காப்புச் செய்யப்பட்டது. சோமவாரக்கட்டளை, பிரதோஷக் கட்டளை, வசந்த உற்சவத்தில் மாம்பழம் நைவேத்தியம் ஆகியவை செய்யப்பெற்றன. திருவிழாக் காலங்களில் நாகப்பையா திருமுறை கேட்பார். நாடோறும் பள்ளியறையில் திருமுறை பாடப்பெறும். கழுவேற்ற நாளில் திருநீற்றுப்பையும் ஞானப்பாலும் வழங்குவார்கள். மீனாட்சி ஆலயத் திருப்பணிக்காக அரைக்காசு மதிப்புள்ள கதவு ஆணியைக் கூடப் பிறரிடம் வாங்காமல் அமராவதி புதூர் நாகப்பையாவும் வெங்கடாசல ஐயாவும் சேர்ந்து செய்த மாபெரும் பணிகளைத் தமிழ் உலகம் வியந்து பாராட்டியது. தேவகோட்டை சத்திரத்தார் வீட்டைச் சேர்ந்த சத்திரம் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் இத்திருப்பணியைப் பாராட்டி அமராவதிபுதூர்க்காரர்கள் இத்திருப்பணியைப் பாராட்டி அமராவதிபுதூர்க்காரர்கள் சிவ புண்ணியத்தை மரக்காலால் அளந்தவர்கள் என்று வியந்து கூறினார்கள்.

*சீர் செய்த சித்திரை வீதிகள் நான்குக்குட்பட்ட*
*தெய்வக்கோயில்*
*ஆர்செய்தது? அரைக்காசு பெறும் கதவாணியும் பிறர்வந்*
*தடித்த துண்டோ?*
*பேர்செய்த நாகப்ப பாண்டியனும் அவனுடனே*
*பிறந்த கீர்த்தி*
*வேர் செய்த வேங்காடசலச் செழியனும் செய்து*
*விளங்கினாரால்*

என்று பாடிய புலவர் பெருமக்கள் பாண்டியமன்னர்கள்

போலத் திருப்பணி செய்த நாகப்ப செட்டியாரை "நாகப்ப பாண்டியன்" என்றும் வெங்கடாசலம் செட்டியாரை "வேங்கடாசலச் செழியன்" (பாண்டியன்) என்றும் வியந்து பாராட்டினார்கள். இந்தப்பணி அன்னை மீனாட்சியின் கடைக்கண் பார்வையில் வந்தது. நாகப்பையாவுக்கு அழியாத பெரும் பரிசை அன்னை தந்தாள்.

திருப்பணிக்குப் பணம் தேவைப்பட்ட பொழுது, தன்னிடம் கடன் வாங்கியிருந்த ஒருவரிடமிருந்து கடனை வசூல் செய்ய நாகப்பையா குதிரை பூட்டிய சாரட் வண்டியில் வண்டிக்காரனோடும் சமையல்காரனோடும் புறப்பட்டார். தேடிச் சென்றவர் ஆத்தூர் போய் விட்டார் என்று தெரிந்தது. தூத்துக்குடியில் இருந்து திருச்செந்தூர் செல்லும் வழியில் உள்ள ஆத்தூருக்கு நாகப்பையா வந்து சேர்ந்தார். கடன் பெற்றவர் அங்கும் இல்லை. இரவு நீண்ட நேரமாகியதால் நாகப்பையா ஆத்தூரில் ஒரு வீட்டுத் திண்ணையில் வண்டி மெத்தையைப் போட்டுப் படுத்து விட்டார். இரவில் மீனாட்சி திருக்கோயிலில் அர்த்தசாம வழிபாடு செய்து ஆலயப் பிரசாதத்தை மட்டுமே சாப்பிடும் வழக்கமுடைய நாகப்பையாவின் மனம் முழுவதும் மதுரை மீனாட்சியைச் சுற்றி வந்தது. உடம்பு ஆத்தூரில் இருக்க உள்ளம் மதுரைக்குச் சென்றுவிட்டது. உள்ளக் கிழியில் உருவெழுதும் உயிரோவியமான மீனாட்சி, நாகப்பையாவுக்குப் பேரருள்புரிய ஆத்தூருக்கு வந்தாள். யாரோ தொட்டது போல் தோன்றியது. கண்விழித்தார் நாகப்பையா. மதுரைப் பதிதழையத் தழையும் கொடி – மலையத்துவசன் வளர்த்த பசுங்கிளி – தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி – திருமகள் கலைமகள் தலைமகள் மலைமகள் – தெளிதமிழ் மதுரையில் வளருமோர் இளமயில் – தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி – அருள் சூற்கொண்ட அங்கயற்கண் அமுது – அவனி தழைத்திட

மவுலி புனைந்தவள் - மீனாட்சியம்மை கையில் அர்த்த சாமப் பிரசாதம் கொண்ட வெள்ளித் தட்டோடு நின்றாள். மகனுக்குப் பசிக்குமே என்று ஆடக மதுரை அணிநகர் விட்டு, ஆத்தூருக்குத் தாய் வந்தாள். பால் நினைந்தூட்டும் தாயின் கருணையைப் பார்த்தபடி இருந்தார் நாகப்பையா.

*சுரும்பு முரல் கடிமலர்ப்புங் குழல் போற்றி!*
*உத்தரியத் தொடித்தோள் போற்றி!*
*கரும்புருவச் சிலைபோற்றி! கவுணியர்க்குப்*
*பால் சுரந்த கலசம் போற்றி!*
*இரும்பு மனம் குழைத்தென்னை எடுத்தாண்ட*
*அங்கயற்கண் எம்பிராட்டி*
*அரும்பும்இள நகைபோற்றி! ஆரணநூ*
*புரம்சிலம்பும் அடிகள் போற்றி!*

என்று வாய்பாட, மனம் மகிழத் தன்னை மறந்திருந்தார் நாகப்பையா. தாம்பாளத்தைக் கையில் வைத்துத் தண்ணளி பொழியும் திருமுகம் காட்டி மறைந்தாள் மதுரைப் பெருந்தேவி.

*தன்னந் தனிநின்றது தான் அறிய*
*இன்னம் ஒருவற்கு இசைவிப் பதுவோ*

என்றபடி சொல்ல முடியாத பேரின்பத்தில் திளைத்த நாகப்பையா வண்டிக்காரனுக்கும் சமையற்காரனுக்கும் பிரசாதம் தந்து தானும் உண்டார். விடிந்ததும் வேகமாக மதுரைக் கோயிலுக்கு வந்தார். வெள்ளித் தாம்பாளத்தைக் கோயிலில் சேர்த்தார். "தாயே! இனி மதுரை எல்லையைத் தாண்டுவதில்லை" என்று உறுதி தந்தார். அவர் மனைவி அமராவதிபுதூரில் இறந்தபொழுதும் ஆன்மா சாந்தியடைய வழிபட்ட நாகப்பையா மதுரையை விட்டுச் செல்லவில்லை.

மீனாட்சியின் அருள் பெற்ற மனம் வேறெங்கும் செல்ல முடியுமா? சிவராத்திரித் திருவிழாவில் பஞ்சமூர்த்திகள் புறப்பாடு கண்ட நாகப்பையா திருமுறைகளைக் கேட்டபடி அருகில் இருந்த தம்பி வேங்கடாசல ஐயாவின் தோளில் சாய்ந்தார். குடம்பை தனித்தொழியப் பறவை பறந்து மீனாட்சியின் திருக்கரத்தில் சுகமாக (கிளியாக)ச் சேர்ந்தது. நாயன்மார்கள் வரிசையில் வைத்து எண்ணத்தக்க பெருமையை நாகப்பையா அவர்கள் பெற்றார்கள்.

இவர்கள் மரபில் வந்த மகாவித்துவான் வயிநாகரம் அ.இராமநாதன் செட்டியார் அவர்கள் தருமபுரம் மடாதிபதிக்குத் தான் எழுதிய சீட்டுக்கவியில்

*துஞ்சாத புகழ்மதுரை மீனாட்சி இறைசோம சுந்த ரேசர்க்கு*
*எஞ்சாத திருப்பணியைத் தாற்கோடி பொருட்செலவில்*
*இயற்றி உள்ளோம்.*
*அஞ்சாது படிஇருபத் தெட்டாண்டு கமிட்டியினில்*
*அரசுசெய்தேன்.*
*செஞ்ஞாலி வயல் அமரா வதிபுத்தூரினில் பிறந்து*
*சிறந்துள்ளேனால்*

என்று இந்தத் திருப்பணியைப் பாடுகிறார்கள்.

இந்தப் பணிகள் முடிந்து 1877ல் ஏழுகோவில் நகரத்தார்களால் ஒரு திருக்குட நன்னீராட்டுச் செய்யப் பெற்றது என்றும் 6-2-1878ல் மொட்டைக் கோபுரம் முழுக்கோபுரமாகித் திருக்குட நன்னீராட்டு நடந்தது என்றும் வரலாறு கூறுகிறது.

திருப்பணிக்குப் புகழ்பெற்ற தேவகோட்டையைச் சேர்ந்த முத்து. கரு. வெ. அழகப்ப செட்டியார் அவர்கள் மதுரை மீனாட்சி திருக்கோயிலுக்கு முதல் நிர்வாக அதிகாரி ஆக (ரிசிவர்) அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டார்கள். மதுரை கூடல் அழகர் கோயிலில் மதுரவல்லித் தாயார் சந்நிதியைக் கட்டிவைத்து வைரத் தாலி செய்து அணிவித்த அழகப்ப செட்டியார் அவர்கள் மீனாட்சி திருக்கோயிலுக்கும் திருப்பணி செய்தார்கள். பல மண்டபங்களையும் புதுப்பித்து ஆலயமுழுவதும் வண்ணம் பூசி, பழுதுபார்த்து 1–7–1923ல் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்தார்கள். இந்த விழாவிற்குப் பிறகு, மிகப் பெரிய அளவில் திருக்குட நன்னீராட்டு விழா இப்பொழுது தான் நடைபெற இருக்கிறது. மதுரை மீனாட்சி கோயிலில் திருக்குட நன்னீராட்டு விழாக் கண்ட அழகப்ப செட்டியார் அவர்கள் அதே ஆண்டில் கூடல் அழகர் கோயிலுக்கும் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்தார்கள். யானைமேலமர்ந்து பெரியாழ்வார் பல்லாண்டு பாடிய திருத்தலம் என்பதால் கோயிலுக்கு யானை வாங்கிவிட்டுப் படித் தனத்திற்காக சின்னக் கடைத் தெருவில் முத்து. கரு. வெ. ஸ்டோர் வீடு கட்டி வாடகைக்கு விட்டு அந்த வாடகையைக் கோயிலில் கொடுக்கச் செய்தார்கள். இன்றும் இப்பணி நடந்து வருகிறது.

கண்டரமாணிக்கத்தைச் சேர்ந்த பெருஞ்செல்வரும், கல்கத்தாவில் தன் வீட்டில் தான் வைத்து வழிபட்ட அம்மன் திருவுருவத்தைக் கண்டரமாணிக்கம் மாணிக்க நாச்சியம்மனாகத் தந்து பலரும் வழிபடச் செய்தவரும் ஆகிய செ. சி. நாராயணன் செட்டியார் திருமகனார் ராவ் பகதூர் நா. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் 1942 முதல் 1945 முடிய மதுரை மீனாட்சி திருக்கோயிலில் அறங்காவலராகத் திறம்படப் பணியாற்றினார்கள். அவர்களுக்குப் பிறகு அவர்களுடைய முதல் மகனும், மதுரையில் தமிழிசைச் சங்கம் தோன்றக் காரணமாக இருந்தவரும், பழமுதிர்சோலை முருகன் கோயில் தோன்றத் துணை நின்றவரும் ஆகிய திரு. லெ. அழகுசுந்தரம் செட்டியார் அவர்கள் தந்தையின் பணியைத் தொடர்ந்து 1949 முதல் 1952 முடிய மதுரை மீனாட்சி திருக்கோயில் அறங்காவலராகப் பணியாற்றினார்கள். இவர்கள் இருவருக்கும் பின்னர், திரு. செ. சி. நா. லெட்சுமணன் செட்டியார் அவர்களின் இளைய மகனும், கலைத்தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்களின் மாப்பிள்ளையும், மதுரையில் மாமனார் வழியில் ஆலையும் வைத்துக் கல்விச் சாலையும் வைத்தவரும் மதுரை மாநகரின் முதல் குடிமகன் என்று புகழப் பெற்றவரும் ஆகிய அறநெறியண்ணல் லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் 1970ல் மதுரை மீனாட்சி திருக்கோயிலில் அறங்காவலர் குழுத்தலைவராகப் பொறுப்பேற்று 1974 வரை மிகச் சிறப்பாகப் பணியாற்றினார்கள்.

1973 ஆம் ஆண்டு நவராத்திரி விழாவில் இசையரசி எம். எஸ். சுப்புலெட்சுமி அவர்களின் இன்னிசை நிகழ்ச்சி மதுரை மீனாட்சி கோயிலில் நடைபெற்றது. நாராயணன்

செட்டியார் அவர்களின் பெருமுயற்சியால் போக்குவரத்துச் செலவை மட்டும் பெற்றுக் கொண்டு இன்னிசை பாட வந்த எம். எஸ். அவர்களை ஆலயத்திற்குள் அழைத்துச் சென்றார் அறங்காவலர் குழுத்தலைவர். சொக்கலிங்கப் பெருமான் சந்நிதியில் பால் நினைந்தூட்டும் என்ற திருவாசகத்தைப் பாடி உருகிய எம். எஸ். அவர்கள் மீனாட்சி சந்நிதியில் பஞ்சரத்னப் பாடல் பாடி மகிழ்ந்தார்கள். மீனாட்சிக்குச் சார்த்திய பட்டாடையை பிரசாதமாகத் தந்தபோது 'இது எனக்குப் பல கோடிக்குச் சமம்" என்று மதுரையின் திருமகளும் சென்னைக்கு மருமகளும் ஆகிய எம். எஸ். அவர்கள் வணங்கிப் பெற்றுக் கொண்டார்கள். அன்று அவர்கள் இசைமழை பொழிந்தபோது அந்தத் தேன் மழையோடு போட்டி போட்டுக்கொண்டு வான்மழையும் பெய்தது. கோயிலின் மேல்தளத்தில் இருந்து தண்ணீர் ஒழுகியது. அங்கயற்கண்ணியின் பாதத்தில் அமைந்துள்ள பத்மபீடத் தகட்டினுள், விரிசல் ஏற்பட்டு, அபிடேகத் திரவியங்கள் உள்ளே செல்லத் தொடங்கின. இதனால் முன்பு (1963ல்) குடநீராட்டு விழாச் செய்த 11 ஆண்டுகளில் மீண்டும் 1974ல் குடநீராட்டுச் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தத் திருப்பணியில் அறங்காவலர் குழுத் தலைவர் லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் மிகுந்த அக்கறையோடும் பொறுப்போடும் பணியாற்றிச் செய்ய வேண்டியவற்றைத் திருந்தச் செய்தார்கள். தளங்கள் முழுவதும் தட்டோடு போடப்பட்டது. கோபுரக் கலசங்கள் புதுப்பிக்கப்பட்டன. மீனாட்சியமம்மன் பாதத்திற்குக் கீழ் தங்கத் தகடு போர்த்தப்பட்டு, சொர்ண பந்தனம் செய்யப் பெற்றது. உயர்திரு. லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் அறக்கட்டளையின் உதவியால் திருமதிலைச் சுற்றியுள்ள நந்தவனப் பகுதியில் பாதுகாப்பாகச் சுவர் எழுப்பப்பட்டது. சுவாமி அம்மன் கோயில் விமானங்களில் பழுதடைந்த சுதை வேலைகள் சீர்திருத்தப்பட்டன. அஷ்டசக்தி மண்டபச்

சித்திரங்களுக்கு வர்ணம் தீட்டப்பட்டது. மங்கையர்க்கரசி மண்டபம், புதுமண்டபம், நகரா மண்டபம் ஆகியவை பழுது பார்க்கப்பட்டன. பொற்றாமரைக்குளம் தூய்மைப்படுத்தப் பட்டது. மூலவருக்கும் 363 பரிவார தேவதைகளுக்கும் எட்டுவித மருந்துக் கலவையினால் அட்ட பந்தனம் செய்யப் பெற்றது. சுவாமி குண்டம் 9 அம்மன் குண்டம் 9 பரிவார குண்டங்கள் 32 ஆக மொத்தம் 50 குண்டங்களுடன் யாகசாலை அமைக்கப் பெற்றது. **26–6–1974ல்** திருக்குட நன்னீராட்டு விழா சிறப்புற நடைபெற்றது. மதிலைச் சுற்றியுள்ள பகுதிகளில் கடைகள் கட்ட முயற்சி நடந்தபொழுது, அதை மாற்றி நந்தவனப் பணி தவிர வேறு பணிகளுக்கு இந்தப் பகுதியைப் பயன்படுத்தக்கூடாது என்று அன்றையத் தமிழக அரசிடம் அரசாணை பெற்று வந்து, நாகப்பையாவின் திருவுள்ளப்படி நற்பணி நடக்கச் செய்த பெருமை, நாகப்பையா தோன்றிய பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சேர்ந்த அறங்காவலர் குழுத் தலைவர் லெ. நாராயணன் செட்டியார் அவர்களுக்கே உரியது. அவர்கள் தலைவராக இருந்த பொழுது மீனாட்சியம்மைக்குத் தங்கக் கவசமும் வைரமுடியும் செய்யப் பெற்று அணிவிக்கப் பெற்றன. பிர்லாவிஷ்ரம் என்ற தங்கும் விடுதி மேலச்சித்திரை வீதியில் கட்டப்பெற்றது. பொற்கிழிப் பரிசுப் போட்டி நடத்தப்பட்டு, முதல் பரிசாகப் பொற்கிழி வழங்கப்பெற்றது.

## தக்கார் சிதம்பரம் சந்நிதித் திருப்பணி

பாண்டிய மன்னர்களும் நாயக்க மன்னர்களும் பல சந்நிதிகளைக் கட்டினர். நகரத்தார் பெருமக்கள் இருந்த சந்நிதிகளை அழகுபடுத்தித் திருப்பணி செய்து பாதுகாத்தார்களே தவிரப் புதிய சந்நிதிகளைக் கட்டவில்லை. இதை மாற்றியவர் கலைக்காவலர் என்றும் மீனாட்சி மைந்தர் என்றும் புகழப்பெறும் இராங்கியம் வி.என். சிதம்பரம் செட்டியார் அவர்கள். திருக்கல்யாணப் புகழ்பெற்ற தென் மதுரைத் திருக்கோயிலில் திருக்கல்யாணக் கோலத்தோடு காட்சியளிக்கும் கல்யாண சுந்தரர் சந்நிதியை சுமார் ஒரு லட்சம் ரூபாய் செலவில் அமைத்து, மங்கையர் வழிபட்டு மாலை பெறச் செய்தார் சிதம்பரனார். பத்தாண்டுகளுக்கு மேலாக அறங்காவலர் குழுத்தலைவராகவும், தக்காராகவும் பணியாற்றிய சிதம்பரனார் மதுரைக் கோயிலின் புகழ் மேலும் பரவச் செய்தார். இந்தியப் பெருந்தலைவர்களும், மடாதிபதிகளும், அயல்நாட்டுத் தலைவர்களும் வந்து வழிபடாத நாட்கள் இல்லை எனலாம். 1981ல் உலகத் தமிழ் மாநாடு நடந்த பொழுது மதுரை மீனாட்சி திருக்கோயிலின் சார்பில் பொற்கிழிக் கவிதைப் போட்டி நடத்தினார் சிதம்பரனார். கவியரசு கண்ணதாசன் அவர்கள் தலையாய தமிழுக்கு நிலையாய மகுடங்கள் என்று தலைப்புத் தந்தார். போட்டிக்கு வந்த 409 கவிதைகளைப் பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் தலைமையில் அமைக்கப்பெற்ற நடுவர்குழு ஆய்வு செய்தது. நீதிக்கும் நேர்மைக்கும் பெயர் பெற்ற சிதம்பரனார் நடுவர்களை யாரும் சந்திக்க முடியாதபடி பிர்லா விஷ்ரத்தில் எல்லா வசதிகளும் செய்து கொடுத்து (மனச்சிறையில்) வைத்து 24 மணி நேரத்தில் முடிவுகளை அறிவித்தார். முதல் பரிசாகப் பொற்கிழி (ரூ. 3001) பெற்றவர் தேவகோட்டை நகரத்தார் சொ. சொ. மீ.

சுந்தரம். மதுரையில் மூன்று முறை பொற்கிழிப் போட்டிகள் நடந்தன. மூன்று முறையும் பொற்கிழிப் பெற்றவர்கள் நகரத்தார்கள். முதல்முறை தேவகோட்டை அரு. சோம சுந்தரன் அவர்கள் இரண்டாவது முறை நெற்குப்பை தமிழண்ணல் இராம. பெரியகருப்பன் அவர்கள். மூன்றாவது முறை சொ. சொ. மீ. சுந்தரம். இது நகரத்தார்களுக்கு மீனாட்சி தந்த பரிசு. ஏறத்தாழ 25,000 பொதுமக்கள் கூடியிருக்க ஆடிவீதியில் பொற்கிழிப் பரிசளித்துக் கவியரசர் தலைமையில் கவியரங்கம் நடத்திக் களிப்புற்றார் சிதம்பரனார். "கடவுள் மறுப்புக் கொள்கை காலாவதியாகி விட்டது. சிதம்பரம் சுறுசுறுப்பும் ஆர்வமும் மிக்கவர். வசதியான குடும்பம். வாழ்க்கைப் பிரச்சினை இல்லை. சிதம்பரம் கரிய திருமால் போல இருந்தாலும் சிவன் கோவிலுக்குத்தான் தலைவர். கோவிலுக்காக என்ன செய்யலாம் என்ன செய்யலாம் என்று அதே வேலையாக அலைகிறார் " என்று எழுதினார் கவியரசர் கண்ணதாசன்.

சிதம்பரனார் திருப்பணிகள் பாராட்டத் தக்க வகையில் தொடர்ந்தன. பொற்றாமரைக் குளத்தில் பொன்னாலாகிய தாமரையைச் செய்து மிதக்க விட்டார்.

*கண்ணாளாம் மீனாள் மதுரை மண்ணாள*
*வாராண்ணு*
*பொன்னாலே தாமரைப்பூ பூக்குமந்தப்*
*பொய்கையிலே*

என்று தாய் பாடிய தாலாட்டைத் தமிழ் மகன் சிதம்பரம் நனவாக்கி நடத்திக் காட்டினார். தமிழ்த் தேரில் உலாவரும் மீனாட்சியம்மைக்குத் தங்கத்தேர் செய்து வைத்தார். நாற்பத்தொன்பது தமிழ்ப் புலவர்களை அழைத்துத் தங்கத் தேரை இழுக்கச் செய்து பரிவட்டம் கட்டிச் சைவத்துக்கும் தமிழுக்கும் தொண்டாற்றினார். திருக்கல்யாணத்தைப்

பல்லாயிரக்கணக்கான மக்கள் கண்டு வழிபடத்தக்க வகையில் வடக்காடி வீதியில், வாரியார் சுவாமிகள் வாய்மொழி கேட்கும் பேறுபெற்ற திருப்புகழ் மண்டபத்திற்கு அருகில் உள்ள புதிய திருக்கல்யாண மண்டபத்தில் நடத்திக் காட்டினார். இந்த மண்டபம் கட்ட நன்கொடையளித்தவர் காரைக்குடியைச் சேர்ந்த மீனாட்சி சுந்தரம் செட்டியார் என்ற நகரத்தாரே ஆவார்.

புதுமண்டபத்தில் சிற்பச் சிறப்புள்ள தூண்களை மறைத்துக் கடைகள் கட்ட ஏற்பாடுகள் நடந்தபொழுது, தனக்கு வந்த அச்சுறுத்தல்களையும் பொருட்படுத்தாது, பெரும்பாடு பட்டு, சிற்பத் தூண்களைக் காப்பாற்றினார் சிதம்பரனார். ஆலயத்தின் பல பகுதிகளிலும் தொடர்புடைய வரலாற்றுச் செய்திகளை எழுதிவைத்தார். செங்கோல் வாங்குதல், திருக்கல்யாணம், தேர்த்திருவிழா ஆகியவற்றை யாவரும் போற்றும் வகையில் சிறப்புற நடத்தினார். தக்கார் என்ற பெயருக்குத் தக்காராக விளங்கிய சிதம்பரத்தை நடமாடும் தெய்வமான வாரியார் சுவாமிகள் மீனாட்சி திருமைந்தன் என்று பட்டமளித்துப் பாராட்டினார். இவ்வாறு நாகப்ப செட்டியார், நாராயணன் செட்டியார் ஆகியோர் வழியில் கல்யாண சுந்தரர் கோயிலுக்குத் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்யும் வாய்ப்பு வி. என். சிதம்பரனாருக்குக் கிடைத்தது.

## இராமநாதன் செட்டியார் இறைப்பணி

நடராஜபுரத்தைச் சேர்ந்த அறப்பணிச் செல்வர் இராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் 1990ல் அறங்காவலர் குழுத் தலைவராகப் பொறுப்பேற்றார்கள். எழுகடல் பகுதியில் வணிக வளாகம் கட்டும் பணி இவர்கள் காலத்தில் நிறைவேறியது. அடுத்த திருக்குட நன்னீராட்டு விழாவுக்கு முழுத்தக்கல் நட்டுத் தொடங்கி வைத்த பெருமை இவர்களுக்கே உரியது. ஆலயத்தின் அன்றாடப்பணிகள் முறைப்படி நடக்க இவர்கள் அமைதியாகப் பணியாற்றினார்கள்.

## சின்னையா – கண்ணப்பர் சேர்ந்த திருப்பணி

கொல்லங்குடி அழகாபுரியைச் சேர்ந்தவரும், கொல்லங்குடிக் காளியம்மன் திருக்கோயிலில் பரம்பரையாகத் திருப்பணி செய்த குடும்பத்தில் தோன்றியவரும் தோட்ட முதலாளியும் ஆகிய உ.சா.தே. சின்னையா செட்டியார் அவர்கள் 21–6–1993ல் மதுரை மீனாட்சி திருக்கோயிலில் அறங்காவலர் குழுத் தலைவராகத் தமிழக அரசால் நியமிக்கப்பட்டார்கள். பாகனேரியைச் சேர்ந்த திருமுறைச் செல்வர் மு. கண்ணப்ப செட்டியார் அவர்கள் அறங்காவலராகப் பொறுப்பேற்றார்கள். இவர் மங்கையர்க்கரசி ஆலை அதிபர். 1974 முதல் தமிழகத்தில் நடைபெறும் திருக்குட நன்னீராட்டு விழாக்கள் அனைத்திற்கும், தேவார திருவாசக முதலிய திருமுறைப் பாக்களை முறைப்படி ஓதுவதற்கு ஓதுவார்களை அழைத்து வந்து காதலாகிக் கசிந்து க்ண்ணீர் மல்கி ஓதச் செய்த திருமுறைக் காவலர் இராம. முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்களின் மைந்தரான கண்ணப்ப செட்டியார் அவர்கள் சிவப் பணியில் தந்தைக்கேற்ற மகனாகத் திகழ்பவர்கள். ஆரவாரமாகப் பேசாமல் அமைதியாகச் செயல்புரியும் சின்னையா செட்டியார் அவர்களும், ஆண்டவன் பணிக்கே தன்னை ஆளாக்கிக் கொண்ட கண்ணப்ப செட்டியார் அவர்களும் பிற அறங்காவலர்களும் சேர்ந்து இப்பொழுது திருப்பணி முடித்துத் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்கிறார்கள்.

இப்பணிக்குப் பல பெருமக்கள் நன்கொடை அளித்திருக்கிறார்கள். நாகப்பையா கட்டிய வடக்குக் கோபுரத் திருப்பணியை, சிதம்பரம், திருவீழிமிழலை, மயிலாப்பூர் ஆகிய ஆலயங்களில் பல லட்சம் ரூபாய் செலவில் திருப்பணி செய்த திருப்பணிச் செம்மல்

கருமுத்து. தி.சு. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களும், மதுரை வங்கியின் வளமிகு தலைவர் டாக்டர் கே.எம். தியாகராஜன் அவர்களும் பெரும் பங்கேற்றுச் செய்கிறார்கள். முக்குறுணி விநாயகர் திருக்கோபுரத் திருப்பணியை அறங்காவலர் பாகனேரி மு. கண்ணப்ப செட்டியார் அவர்களும், வடக்கு அஞ்சுநிலைக் கோபுரப் பணியை ஒக்கூர் சிக.அரு.சோம. இராமநாதன் செட்டியார் அவர்களும் பொறுப்பேற்றுச் செய்திருக்கிறார்கள். மங்கையர்க்கரசி மண்டபத் திருப்பணியை அறங்காவலர் மு. கண்ணப்ப செட்டியார் அவர்களின் பெண் மக்கள் ஏற்றுச் செய்கிறார்கள். சுவாமி சந்நிதியில் உள்ள 64 திருவிளையாடல் சிற்பங்களுக்கு வர்ணம் பூசும்பணியை ஒக்கூர் சி.கரு.சிவ. ஆதப்ப செட்டியார் அவர்கள், சி.கரு.ஆத. கருப்பன் செட்டியார் அவர்கள், நாட்டரசன் கோட்டை கண.க. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோர் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். திருக்குட நன்னீராட்டுக்காக நகரத்தார் பெருமக்கள் இதுவரை ஏழு வெள்ளிக்குடங்களைச் செய்து திருக்கோயிலுக்குத் தந்திருக்கிறார்கள்.

சின்னையா செட்டியார் அவர்களின் பெருமுயற்சியால் பல பணிகள் செய்யப்பட்டுள்ளன. திருக்கோயில் முழுவதும் 55 லட்சம் செலவில் மின் கம்பிகள் புதிதாகப் போடப்படுகிறது. மண்டபங்களும் தூண்களும் சுத்தப்படுத்தப் படுகின்றன. ஓவியங்கள் வண்ணம் தீட்டப்படுகின்றன. மகா மண்டபத்தில் தரிசன மேடை, அம்மனைப் பார்க்க வசதியாக மூன்றடி அகலமாக்கப்படுகிறது. பொற்றாமரைக்குளத்தில் வைகைத் தண்ணீர் நிரப்பப்படுகிறது. சுவர்களில் வண்ணங்களால் மாணிக்கப்பட்டை தீட்டப்படுகிறது. சுவாமிக்கு 25 குண்டங்கள் அம்மனுக்கு 25 குண்டங்கள் பரிவார தேவதைகளுக்கு 97 குண்டங்கள் ஆக மொத்தம் 147

குண்டங்களில் யாகசாலை வேள்விகள் சுமார் 300 சிவாச்சார்யார்களால் நடத்தப்படுகின்றன. எல்லாத் திருவுருவங்களுக்கும் அட்ட பந்தனம் செய்யப்பெற்று மீனாட்சியம்மைக்குச் சொர்ணபந்தனமும் செய்யப்படுகிறது. பூங்காவில் உள்ள நந்தவனச் சுவர் அறநெறியண்ணல் லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் அறக்கட்டளையால் ரூ. 1,50,000/- செலவில் புதுப்பிக்கப்படுகிறது.

## நகரத்தார்களின் பிற பணிகள்

பாகனேரி திருமுறைக் காவலர் இராம. முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்கள் இந்தக் குட நீராட்டிலும் திருமுறைப் பாராயணத்திற்கு மிக நல்ல முறையில் ஏற்பாடு செய்துள்ளார்கள். தேவகோட்டை கயி. திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள் யாகசாலைக்குப் பொறுப்பேற்றிருக்கிறார்கள். கீழப்பூங்குடி கூ. அரு. பசுமடத்திலிருந்து நாள்தோறும் 8 லிட்டர் பால் அபிஷேகத்திற்கு அனுப்பப்படுகிறது. மதுரை நகரத்தார் சங்கத்தின் சார்பில் சொக்கலிங்கப் பெருமானுக்கு மாசி மாதம் மகாசிவராத்திரியில் முதல் காலத்தில் சிறப்பாக அபிடேகம் நடத்தப்படுகிறது.

மதுரையின் புகழைப் பல நூற்களின் மூலம் எழுதி வெளியிடும் திருப்பணியையும் நகரத்தார்கள் செய்திருக்கிறார்கள். கலைக்காவலர் வி. என். சிதம்பரம் அவர்கள் அங்கயற்கண்ணியின் அற்புதங்கள் என்ற நூலையும், தமிழவேள் டாக்டர். ச. மெய்யப்பன் அவர்கள் மதுரை மீனாட்சி என்ற நூலையும் எழுதி மீனாட்சி திருக்கோயிலின் பெருமைகளை வாயாரப் பாடுவது போல மனமார எழுதியிருக்கிறார்கள். தேவகோட்டை மேலவீட்டுச் சின்னையா செட்டியார் அவர்கள் மதுரை மீனாட்சியம்மை பதிகம் பாடியிருக்கிறார்கள்.

சிற்பச்சிறப்புமிக்க கம்பத்தடி மண்டபத்தை கட்டிவைத்ததும் நகரத்தார் பெருமக்களே ஆவர்.

## நிறைவுரை

மீனாட்சியை வணங்காத நகரத்தார்கள் இல்லை. மீனாட்சி என்று பெயர் வைக்காத வீடும் இல்லை. நாகப்ப செட்டியாருக்குக் காட்சி தந்து பிரசாதம் அளித்த மீனாட்சி

*அன்றொருகால் நம்பசிகண்டு அந்தோ தரியாது*
*நன்றிரவில் சோறளித்த நற்றாய்காண்.*

என்று வள்ளல்பெருமான் பாடியதை நினைவூட்டுகிறாள். நம்முடைய வாழ்வின் விளக்கமான மீனாட்சியம்மையின் திருக்குட நன்னீராட்டு விழாக் காணும்பொழுது அவளுக்குப் பணியாற்றிய அடியார்களையும் நினைக்க வைத்த அவள் கருணையை எண்ணி வியக்கிறேன். அவள் திருவடிகளில் சொல்மலராக இந்த நூல் பணிவோடும் பக்தியோடும் வைக்கப்படுகிறது. நகரத்தார் பணிகளில் பலவும் இந்நூலில் விட்டுப்போயிருக்கலாம். அவற்றைத் தெரியக்காட்டிச் சேர்க்க அன்னை திருவருள் செய்ய வேண்டுகிறேன். அவளைப் பணிந்து அவள் அருளால் வாழ்ந்து அவள் திருவடியில் பேரின்பம் அடைவோமாக!

---

**Anbu - Madurai-2.**

